# மகா ராணி பானுமதி

---

இரவு வானுக்கோ ஒரு மதி- கண்டு காதலர் மனம் மகிழ
மாதத்தில் வரும் ஒரு பௌர்ணமியோ பெருநிதி
மன்னன் இதயத்திலே இரவும் பகலும் ஒளிரும்
தேயாத காதல் மதி, காதல் மகாராணி பானுமதி

அழகிலோ திருமகள்,அறிவிலோ கலைமகள்
துணிச்சலில் மலைமகள், பிறர் துயர் துடைப்பதில்
தாய்மையின் மேன்மை, என்னைக் காதலால்
கட்டிப்போட்ட கன்னியோ காதலின் மென்மை



சாயலில் தோகை நடையில் அன்னம்
பூவை மனதில் பூவினம் வீசும் நறுமணம்
நாளும் விடியலைச் சொல்லும் பூபாளம்
என்னைத் தழுவிடும் அன்பில் ஹிந்தோளம்

செவ்வாயில் வற்றாத தேன் சுவைகள்,
கனிமொழியிலே சப்த சுரங்கள், குலமகளாய்
என்னை ஆளும் காதல் மகளோ குபேரநிதி-
காதல் சுகம் தரும் பூங்கொடியோ சங்கநிதி





மங்கை மனமோ காதல் தேசம்,
பொன்மேனியில் நாளும் பரிமள வாசம்
கனிமொழிகளில் நாதம், நாளும் சுவைத்திட
அஞ்சுகத்தின் காதலோ திகட்டாத அருஞ்சுகம்

கார்குழலில் மலர்கள் சிரிக்க, பூங்கரங்களில்
நவரத்தின வளையல்கள் குலுங்க, குண்டலத்தில்
வைரம், கொடி இடை பற்றிய மேகலையில் முத்து
கொவ்வைச் செவ்வாயில் அமுதோ வற்றாத சொத்து

மையேந்தி ஆடும் விழிகள், மலர் ஏந்தி ஆடும் கார்குழல்,
தோகையின் சாயல், அன்னத்தின் நடை, மன்னவன்
என்னைக் கொல்லாமல் கொல்லும் அழகு, மாசில்லாக்
காதலால் என்னை ஆளும் காதல் தேன் நிலவு

சுயம்வரத்தில் நண்பன் கர்ணன் துணையோடு
சிறையெடுத்த கலிங்கத்து இளவரசி, என் வீரத்திலும்,
ஒழுக்கத்திலும் காதலாகி என்னை ஏற்று
நெஞ்சத்திலும், மஞ்சத்திலும் இன்பம் தரும் அன்பரசி
மனமோ மலர் மஞ்சம், இதழ்களோ தேன் கிண்ணம்
பூ மணம் விசும் மங்கையோ பொன் வண்ணம்

வான்மதிக்கும் மாதத்தில் ஓர் அமாவாசை
என் நெஞ்சில் உலவும் காதல் மதி
பானுமதிக்கு நாளும் பௌர்ணமி-காதலர்
வாழ்வோ அன்பு பெருக்கெடுக்கும் கங்கை நதி






பாஞ்சாலிக்கு நேர்ந்த துயருக்காய் போர்க்கொடி ஏந்தி,
பெண்ணியத்திற்காய் குரல் கொடுத்த முதல் பெண்மணி
மன்னவனானலும் புரிந்தது மகாபாவம் எனக் கடிந்து,
மௌன விரதம் பூண்டு கணவனை ஒதுக்கிய மகாராணி

பானுமதி வாழ்விலும் வந்த அமாவாசை, பாஞ்சாலிக்காய்
காரிருளில் மறைந்த காதல் நிலவு, மௌன விரதம் பூண்ட
தவ வாழ்வு,மன்னன் மனமோ சோகத்தால் தேயும் நிலவு
சூரியனும், சந்திரனும் இணைந்த பானுமதி
வெப்பமும், குளிர்ச்சியுமான காதலின் சங்கநிதி

மனைவியின் குரலுக்கு மதிப்பளித்து,
மகாராணியாய் நடத்திய மன்னவன் பெருமை
கர்ணன் மாண்டபோது-கணவனைக்
கட்டியணைத்து மௌனத்தில் தேற்றிய சிநேகிதி

நட்பிற்கு இலக்கணம் வகுத்த நண்பன் கர்ணன்
பாசத்தால், பானுவின் நெஞ்சைக் கவர்ந்து
அண்ணன் முறையான அங்கத நாட்டு மன்னன்
நட்பு, பாசத்தின் இலக்கணமான அற்புதன்



சதுரங்கமாடிய போது-கனவன் வரக் கண்டு பணிவோடு
எழுந்த பானுமதி-ஓடாதே நில் என மேகலையைப் பற்றிட
அறுந்த மேகலை, அறுந்த முத்துக்களை பொறுக்கவா,
கோர்க்கவா எனக் கேட்ட மன்னன் நட்போ அருங்கலை



என்தன் அன்பை மறவாத நண்பன்
எனக்காய் தன்னுயிர் நீத்த அன்பன்-பாண்டவருக்கு
மூத்தோனாய் இருந்தும் பாசமிகு உத்தமன்

எல்லாம் இழந்தேன், பிதாமகரோ அம்புப் படுக்கையில்,
துரோணர், நண்பன் கர்ணன், மாமன் சகுனி,
சுற்றமுமும், உடன் பிறப்பெல்லாம் இழந்தும்
இழக்காதது காதல் ஒன்றே இறுதி யுத்தம் இன்றே

குறும் புன்னகையோடு காதல் பொங்க
பானுவை நோக்கிய மன்னன், மாலை வெற்றி
மாலை சூடி வருவேன் தேவி, உன் சினம் தணிந்து
சிந்தை குளிர்ந்திட காதல் சொல்வேன் ராணி

வாழ்த்தி அனுப்பு ராணி, அச்சமென்பது நான் அறியாத
ஒன்று, துச்சம் என்தன் உயிர், எனக்காய் மடிந்தவரோ
பல இலட்சம், என்னுயிர் நிறைந்த நட்பும், உடன் பிறப்பும்
மாண்டபின் சரணாகதி என்பது மாவீரனுக்கு நிந்தை அவமானம்

மின்னும் தங்கக் கவசத்தில் மாவீரன் துரியோதனன்
கன்னம் சிவக்க பானுவைக் காதலோடு நோக்கி கூறிய
மொழிகளில் என்னுயிர் நீதானடி என்ற தாபம்
காதலே ஏனடி என்மீது இந்தக் கோபம் என்ற பாவம்





விழிபேசும் மொழி கேட்டு பூ விழிகளில் ஈரம்
மன்னவனே சென்று வாருங்கள், வென்று வாருங்கள்,
வாழ்த்திய நெஞ்சில் இனம் புரியாத சோகம்,
சிவனை வேண்டி நாளெல்லாம் பானுமதி பூண்ட விரதம்
--------------------------------
மணநாள் முதல் அந்தகன் திருதராட்டினனோடு
கண்களைக் கட்டி அந்தகிபோல் வாழ்ந்து வாழ்வை
அருந்தவமாக்கிய அன்னை, தன் ஒரு மகனாவது வாழ
ஆசி வழங்கிட மகனை அன்பொழுக அழைத்த அம்மை

குழந்தைபோல் நிர்வாணியாய் அன்னை முன் வா
மகனே, என் பார்வை பட்டு உன் தேகம் எஃகுவாகும்
எந்த ஆயுதமும் உன்னைத் தாக்காது,
காயப்படுத்தாது, நான் வழங்கும் ஆசி இது

அன்னையானாலும் நிர்வாணியாய் அன்னை முன்
செல்ல வெட்கிய இளைஞன், இடுப்பிற்கு கீழே
அந்தரங்க உறுப்பை இலையால் மறைத்து அன்னைக்குத்
தன்னைக் காட்டி ஆசீர் பெற்ற தவப்புதல்வன்







அன்னை காந்தாரியின் பார்வை பட்ட
இடமெல்லாம் எஃகுவாக உறுதியான தேகம்
இடுப்பிற்கு கீழே மென்மையான தேகம்,
இதயத்திலோ காதலின் கீதம்

எஃகுவான தேகம், இடுப்பிற்கு கிழே மனித உடலான
பாவம், கதை மார்பைத் தாக்கியும் மன்னனின்
இளைக்காத வீரம், தொடையைத் தாக்கு, சைகையால்
பீமனுக்கு அறிவுறுத்திய கிருஷ்ணனின் மகுடி நாதம்

பலநூறு யானைப் பலம்கொண்ட பலவான்கள் மோதிட
நடந்த இறுதி யுத்தம், மின்னலும், இடியுமென கதைகள்
மோதிடப் பிறந்த வான் முட்டும் சத்தம், தொடை பிளந்திட
விழுந்த மன்னன் ஆறாய் ஓடிய இரத்தம்

இடுப்பெலும்பு நொருங்கிட மண்ணிலே கிடந்த
மன்னவன், மனதிலே வெற்றிச் சிரிப்பு-உறவுகளோடு
கூடிக்குலாவிட மரணம் கூட நல்ல வாய்ப்பு



ஆன்மா கொல்வதுமில்லை, கொல்லப்படுவதுமில்லை
கொல்வதும், கொல்லப்படுவது உடம்பின் செயல்கள்
இரத்தம் சிந்தும் யுத்தத்தில் தர்மம் ஏது? கொல், அல்லது
கொல்லப்படுவாய் யுத்த நீதியான துயரம், மடிந்தால்
சொர்க்கம், வென்றால் தேசம், கிருஷ்ணனின் உபதேசம்



அந்தியில் கேட்ட கண்ணனின் பாஞ்சஜன்னியம்
அத்தினபுரியே அதிர யுத்தம் முடிந்தது என்ற கோஷம்
அறிந்த நெஞ்சம் பதற, களம் நோக்கி விரைந்த பானுமதி,
புன்சிரிப்போடு தரையிலே கிடந்த தன் வீரபதி

தொடை கிழிய, நடையிழந்த கரியாய் தரையில் விழுந்த
மன்னன், வாதையின் உச்சத்தில் முகத்தில் புன்னகை,
கண்ணீரோடு விரைந்து வரும் தன் தேவியைக் கண்ட
முகத்தில் காதலால் தோன்றிய கனிந்த புன்னகை

மாமலையோ சரிந்து கிடப்பது?-நிழல்தரும் தருவோ
போர்ப் புயலில் முறிந்து கிடப்பது? அலைபாயும் கடலோ
வற்றிக் கிடப்பது-கண்டு, கால் முறிந்து முடமாகி
கலாபம் இழைந்த மயிலாய் வருந்திய தேவி, பானுமதி





கண்களில் கணைபட்ட கலைமானின் வேதனை
மொழிகளோ ஊமையான சோதனை
கணவனை அணைத்து மடியில் கிடத்திய நெஞ்சில்
என் கணவன் மாவீரன் என்ற மங்காத கீர்த்தனை

கண்டுதான் பூவிழிகளும் அந்திவந்தென்று வாட
கண்ணீர்தான் ஆறாய் ஓட, உண்டு மகிழ்ந்த
காதல் மொழிகள் ஊமையானதென்ன?
என் உதயம் இன்று அஸ்தமித்ததென்ன?

விழியோடு விழிகலக்க கலக்கம் மறைந்த விழிகளில் காதலின்
தாபம், குறுநகை பூத்த விழிகளில், பானு என் கண்ணே
என்ற காதலின் பாவம்-தன் இணையை பிரிந்த அன்றிலாய்
மகாராணி பானுமதி மனம் அனுபவித்த கொடுந் துயரம்

மங்கை வாழ்வோ ஈரவிழிக்காவியம்
நங்கையோ வண்ணமிழந்த ஓவியம்-பூத்தாடிய
நந்தவனத்தை கொடும் புயல் அழித்ததென்ன?
சிந்து பாடிய கோகிலம் தனிமையில் அழுவதென்ன?



தொடையிலே கதாயுதத்தால் அடித்து வீழ்த்தி
வெற்றி வீரனாய் வீமன் நடைபோட, வீமா யுத்த விதியை
மீறி என் பதியை இடுப்பின் கீழ் தாக்கியது நியாயமா?
சீறிச் சினந்த விழிகள் ஏவிய அக்கினி அம்புகள்

உன் அங்கத்தில் பல காயங்கள்-ஆனால்
ஒன்று கூட உன் இடுப்பிற்கு கீழே இல்லை
என் பதியோ வீரர், உன்னைக் கொல்ல
யுத்த விதிகளை மீறாத சூரர்



கங்கையை கண்களில் வைத்தாள்
காங்கையை நெஞ்சில் வைத்தாள்
தருமத்தை இதயத்தில் வைத்தவள்-நீதியை
மொழியில் வைத்து வீரன் நாணிட வினவினாள்

சிறு வயதில் என்னை நஞ்சூட்டிக் கொல்ல முயன்றவன்
தாயோடு சேய் எங்களை அரக்கு மாளிகையில்
எரிக்க முயன்றவன் துரியோதனன் அறியாயோ?
அன்று அவனுக்கில்லாத நீதி இன்று எங்களுக்கெதற்கு?

விழிகளால் பேசாததே என வீமனை
அடக்கிய கண்ணன், பானுவை முறைத்த
பாஞ்சாலி விழிகளில் கோபாக்கினி
முடிந்த கூந்தலிலே துச்சாதனன் குருதி



வெற்றி கிட்டியும், பாஞ்சாலியே உன் குருதி விடாய் தணிந்ததா?
உன் யுத்தவெறியால் மடிந்த உயிர்கள்தான் எத்தனை? என் மகன்
இலட்சுமணகுமாரன் உயிரைத் திருப்பித் தருவாயா? இல்லை,
இடும்பி மகனையோ, சுபத்திரை புத்திரனையோ தரமுடியுமா?



நீராடி, நெய் வாரி, மலர் சூடும் கூந்தலை
குருதி வாரி முடிந்த பெண்மணி நீதானடி
நறுமணம் வீசும் மதுமலர்க் கூந்தலில் பிணவாடை,
தாய்மை மணம் வீசும் நெஞ்சில் குருதி வாடை

உன் கேலியால் புண்பட்ட என் கணவன் உன்னைப் புண்படுத்தியது
தவறு, மறுக்கவில்லை, பெண்மைக்கு அழகு அடக்கம்,
உன் கேலிச் சிரிப்பால் நிகழ்ந்த அனர்த்தம் கொடிது கண்டாயா?
மடிந்த வீரர்கள் எத்தனை? கைமை பூண்ட பெண்மை எத்தனை?

வசை பாட முற்பட்ட பாஞ்சாலியை தடுத்த கண்ணன்,
பானுவும் என் சிநேகிதி, பாஞ்சாலி, அவளுக்கு நிகராய் நீயில்லை,
அவளைத் திட்டாதே அவள் உத்தமி, என நியாயத்தை
எடுத்துரைக்க முனைந்த கண்ணனை இடைமறித்த பானுமதி

கண்ணா அன்று நான் உன் சிநேகிதி, ஆனால் இன்றில்லை
உன் சதியும், வெற்றிக்காய் நீ வீழ்த்திய மாபுருஷர்களும் மீண்டும்
உயிர் பெற்று எழுந்து வர முடியுமா?, அருச்சுனன் ஒரு பேதை
உன் கையில் அவனோ வெறும் அஸ்திரம், ஏவியது நீயே





சிகண்டியை நிறுத்தி பிதாமகரை வீழ்த்தினாய்,
தருமன் பொய்யுரைக்க குரு துரோணரைக் கொன்றாய்,
ஜெயந்திரனை வதைக்க சூரியனை மறைத்தாய்,
சகாதேவன் குறித்த நாளை சதியால் புறக்கணித்தாய்-

இந்திரனை அனுப்பி கவச, குண்டலங்களைப் கவர்ந்தாய்-குந்தியை
தூதனுப்பி நாகஸ்திரத்தை ஒரு முறைக்கு மேல் ஏவாதே,
பாண்டவர் உன் சகோதரர் கர்ணனை பாசத்தால் நொருக்கினாய்
தேர்ச்சில்லு புதைந்த நிலையில் நிராயுதபாணியை வதைத்தாய்

பாண்டவர் தூதனாய் வந்து, விதுரர் அதிதியாய் மாறி மன்னன்
மனதில் சந்தேகத்தை விதைத்து, இருவரையும் பிரித்தாய்,
வில்லை முறித்து மாவீரர் ஒதுங்கிட வெற்றி பெற்ற உன் சதி,
ஆட்டுவித்தால் ஆடும் பொம்மைகளாய் உன் பக்தர்களின் விதி

உன் புல்லாங்குழலில் வேணுகானம்
ஆடும் பக்தர்களோ படம் விரித்த நாகங்கள்-உன்
பக்தனுக்கெல்லாம் பகுத்தறிவு பூச்சியம்-நீ
நடத்தும் நாடகத்தில் எல்லாம் பொம்மைகள்

இதோ மாவீரன் என் புருஷனை யுத்த விதி மீறி
இடுப்பின் கீழ் அடித்து வீழ்த்தினாய், இதுவோ நீதி
ஓதிய உன் கீதை உண்மைக்குப் பாதையாகுமோ?
உன் பசப்பு வார்த்தைகளில் தர்மம் வாழுமோ?





உன் பொம்மலாட்டத்தில் பாண்டவர்களோ பொம்மைகள்,
யுத்தத்தை நடத்திய நீயோ ஆயுதம் ஏந்தாத சூத்திரதாரி,
அருச்சுனன், வீமனோ அறிவற்ற பலசாலி,
விதுர நீதியை வீண்விரயமாக்கிய உன் நீதியோ சதி

மடிமீது தன் மன்னவனை வைத்து அழுதாள்,
மடியும் நிலையிலும் பானு உன் காதலை திரும்ப
வென்று விட்டேன் வெற்றி நமக்கே மன்னனாய்
மடிவது பெரிதல்ல, காதலி மனதை வெல்வதே வெற்றி

விழியோடு விழி கலந்திட, கலக்கம் மறந்த விழிகளில்
காதலின் மயக்கம், குறுநகை பூத்த விழிகளில்
பானு என்ற மோகன ராகம், துணையை இழந்த
நெஞ்சில் ஒற்றைக் குயிலின் சோக பாவம்

உன் தேனிதழ் முத்தங்களின் ஈரம் என் கனி இதழ்களில்
காயவில்லை, நீ சொன்ன காதல் கவிதைகளின் சந்தம்
என் பூங்காதுகளில் ஓயவில்லை, ஊடலாகி உன்னைப் பிரிந்தும்,
பெண் மனதிலே உன்னோடு கூட ஆசைகளோ கோடி



கனவிலும், நினைவிலும் உன்னைத் தழுவி
காதல் பசியாறத் தவமிருக்கும் பெண்மை
நாம் இருவரல்ல ஒருவர் காதலாகி
கணவன் மனைவியராகி நான் கண்ட உண்மை



எத்துனை நல்லவன் என் கணவன், நான் புறக்கணித்தும்
பிற மாதரை நாடாத உத்தமன்-என் காதலை
தீபமாய் நெஞ்சுக்குள் வைத்து-காமப்புயலிலும் காத்து
என்னை அன்பு செய்த ஏக பத்தினி விரதன்

கண்ணீர் சொரிய, உள்ளம் குமுற, காதலான உள்ளம்
விம்மிச் சோர நெஞ்சோடு அணைத்து அழுத பெண்மை,
என்னை மன்னியுங்கள் உங்கள் அன்பிற்கு நான்
கொடுத்த தண்டனை பெரிது விம்மிய மங்கை

புன்னகையோடு கண்ணயர்ந்த மன்னன்
பானுவை வென்றேன் என்ற காதலன்
பிறந்தவர் மடிவது உறுதி-பரிகாரம் காண
முடியாத நியதி, வருந்துவது உறவின் நீதி

குமுறினாள், விழி நீர் சிந்தி அஞ்சனம் கரைய விம்மினாள்,
மார்போடு அணைத்து என் மாவீரர் நீங்கள் எனப்
போற்றினாள், மஞ்சளும், குங்குமமும், மலர்களும்,
மணமாலையும் தந்தவனை வணங்கினாள் தேவி





பாண்டவர் வென்ற பூமியெங்கும் குருதிக்கறை
பாஞ்சாலி கூந்தலிலும் இரத்தக் கறை
இவர்களுக்கு அடிமையாய் வாழ்வதிலும்
பத்தினியாய், பர்த்தாவோடு மடிவதே மேல்

விழிகளைத் துடைத்த ராணி, மண்ணில் விழுந்த மாவீரன்
தேவி-பொட்டோடும்,பூவோடும், புன்சிரிப்போடும்
கம்பீரத்தோடு கணவன் உடல் அருகே படுப்பதுபோல்
உறங்கி, அக்கினியில் விண்போன பானுமதி பத்தினி

சகல மரியாதைகளோடு மன்னன் உடலை
சிதையில் கிடத்திட, தேவி கனிவோடு சிரித்தாள்
நீங்கள் இல்லாத உலகில் எனக்கேது இடம்
மன்னவனே நீ வாழும் இடமே என் புகலிடம்

பதி உறங்கும் சிதையை மலர் மஞ்சமெனப் பக்தியோடு
வலம் வந்த ராணி, மகிழ்வோடு பதியை அணைத்தவாறு
உறங்க இன்றோ முதலிரவாய் கிடைத்த பேறு
மனம் மகிழ்ந்து கொண்டாட இன்று நம் தேன் நிலவு

கண்மூடி கணவனை அணைத்த பானுமதி
பக்தியோடு எரிந்த சிதை, பார்த்த
மனங்களில் இவளோ புதிய சீதை, இவள்
அல்லவா பத்தினி என்ற கீதை



மங்கல அணி பூண்ட மகாராணி வாழும் காதலை நெஞ்சில்
நிறுத்தி, கணவனை தேவன் எனப்போற்றிய கலைவாணி,
சிதையில் கணவன் அருகில் மகிழ்வோடு தன்னைக் கிடத்தி
பற்றிய தீயில் மறைந்து பர்த்தவோடு வானுயர்ந்த பத்தினி

சிதை எரிய சிந்தை குளிர வானகம் சென்ற தேவி
பூமழை பொழிந்து வரவேற்ற சிவன்
சிந்தை மகிழத் தொழுது மகிழ்ந்த உத்தமி
தன் பதியோடும், மகனோடும் ஒன்றான பத்தினி



வான் நோக்கிய விழிகளில் வியப்பு
வான் பொழிந்ததோ மழையெனப் பூ
கண்ணன் குனிந்து எடுத்ததோ ஆவாரம் பூ
பெருமான் சிவனுக்குப் பிடித்தமான பூ

ஒரு கணம் இருண்ட வானம் மறுகணம் ஒளிர
பூ மழை பொழிய வியந்த பாண்டவர், விழுந்த ஆவராம் பூ
பூவைப் பொறுக்கி  தன் பக்தையைக் கண்டு
பெருமான் சிவனார் மகிழ்கின்றார் என்ற மாதவன்



பெருமான் சிவனுக்கு உகந்த மலர் ஆவாரம் பூ, உத்தமி
பானுவுக்கு ஆவாரம் பூத்தூவி வரவேற்ற சிவபெருமானின்
பேரின்பம், பானுவுக்கு நிகராய் நீயில்லை பாஞ்சாலி-கண்ணன்
பார்வையால் மொழிந்த மொழியிலே பானுமதிக்குப் புகழாரம்

-------

கண்ணிழந்த தந்தைக்கு கண்ணாயிருந்த
மகன் மாண்ட சேதி பேரிடியானது, வாழ்வைத்
தவமாக்கிய அன்னைக்கு நாம் இனி அநாதை
என்ற உணர்வு இதயத்தை நொருக்கியது

பாண்டவரில் யாரும் ஏகபத்தினி விரதர் அல்ல,
பானுவைக் கைப்பிடித்தவனோ, பானுமதியைத்
தவிர வேறு எந்தப் பெண்ணையும் மனத்தாலும்
தீண்டவில்லை- மன்னன் காதல் புனிதமானது

பாஞ்சாலிக்கு சேலை கொடுத்தவனால்
பானுமதிக்கு நீதி வழங்க முடியவில்லை
கைமை பூண்ட பல இலட்சம் விதவைகளின்
வாழ்வில் ஒளியேற்ற முடியவில்லை

அண்ணன், தம்பியர் என ஒருத்தியை ஐவர் மணப்பது
தவறெனத் தருமனுக்குத் தெரியவில்லை-
பகடை ஆட்டத்திற்கு பந்தயப் பொருளாய்
தம்பியரையும், தாரத்தையும் வைத்து ஆடுவது
தப்பெனப் புரியவில்லை-தடுத்தி நிறுத்திட
கிருஷ்ணனாலும் முடியவில்லை

தர்ம யுத்தமா குருஷேத்திரம்? விடையில்லை
பக்தி கடந்தவனுக்கு யுத்தம் அதர்மம்
பக்தி வந்தால் புத்தி பறிபோகும் யதார்த்தம்

குந்திக்கு கணவர் ஐவர், மாந்தாரிக்கு மூவர்
நியோகத்தால் குந்தி, மாந்தாரி ஈன்ற பிள்ளைகள்
குந்தி புத்திரனுக்கல்ல, பாண்டு புத்திரனுக்கே அரியணை
துரியோதனன் வாதம், யாரும் ஏற்காத நீதியின் கீதம்

அம்பை, அம்பிகா, அம்பாலிகா வாழ்வை
துன்பமாக்கி, காந்தாரி வாழ்வை இருளில்
மூழ்கடித்த நைட்டிக பிரமசாரி பீஷ்மன்-பானுவின்
வாழ்வை வசந்தமாக்கிய காதலன் துரியோதனன்

ஐவரை மணந்தும் பாஞ்சாலி வாழ்வில் ஆறாத்துயரம்,
பந்தயப் பொருளான நங்கை, மானத்தைக் காக்க
கண்ணனை கதறி அழைத்த பேதை-அஸ்வத்தாமனால்
குழந்தைகள் அனைத்தையும் இழந்து கதறிய தாய்மை

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-24-09-2024*

மகாபாரதத்தில் கண்ணன் பாண்டவர்கள் வெற்றி பெற உதவ பல தந்திரங்களையும் நுண்ணிய முறைகளையும் பயன்படுத்தினார். சில முக்கிய சதிகள் இவை:

1. அச்வத்தாமாவை கொன்றது போல பொய்யாகக் கூறுதல்**: குருபட்சத்தில் முக்கியமான வீரரான த்ரோணர் தனது மகன் அச்வத்தாமா உயிரோடு இருப்பதற்காகவே போரில் எஞ்சியிருந்தார். கண்ணன் த்ரோணரை உளவியல் ரீதியாக தகர்க்க அச்வத்தாமா இறந்துவிட்டான் என்று பொய்

செய்ததை சொல்லச் செய்தார். இது த்ரோணரை போருக்குள் தன்னம்பிக்கையற்றவராக மாற்றி அவரை குறிக்கோளற்றவனாகச் செய்தது.

2. கர்ணனின் தேரின் சக்கரம் நிலத்தில் சிக்கிய தருணம்**: போரின் போது கர்ணனின் தேரின் சக்கரம் நிலத்தில் சிக்கிக் கொண்டது. கர்ணன் அதனை சீரமைக்க முயன்றபோது கண்ணன் அங்கு துரியோதனிடம் அளவில்லாத வினைகளைக் கூறி அவனை அசைவிழக்கச் செய்து அதன்பின் அர்ஜுனனுக்குக் கர்ணனை அழிக்கச் செய்தார்.

3. பகல்போரில் ஜெயதிரதனை கொல்வதற்காக சூரியனை மறைக்க செய்தல்**: கண்ணன்இ அர்ஜுனனுக்குப் பகைவரான ஜெயதிரதனை கொல்ல ஒரு குறுகிய நேரத்தை வழங்க சூரியனை தற்காலிகமாக மறைத்தார். பகைவர்கள் சூரியன் மறைந்துவிட்டது என்று எண்ணி தளர்த்தப்பட்ட போது கண்ணன் சூரியனை மீண்டும் வெளிப்படுத்திஇ அர்ஜுனன் ஜெயதிரதனைப் படுகொலை செய்தார்.

4. பீமனின் சபதம் - துரியோதனனின் இறுதி அழிவு**: கண்ணன் பீமனை அவன் துரியோதனனின் இடுப்பு எலும்பை அடிக்க உறுதியாக வைத்து விதுரா நீதி விதிகளை தாண்டி துரியோதனனை முடிவடையச் செய்தார்.இவ்வாறு கண்ணன் பல நுண்ணிய சதிகளைச் செய்து போரில் பாண்டவர்களுக்கு வெற்றியை உறுதி செய்தார்.

--------------------------------------------------

விதுரா நீதி** என்பது மகாபாரதத்தில் விஷயங்களை சரியான முறையில் செய்வது தன்னுடைய முடிவுகளை முறையாகச் செய்வது பற்றிய அறிவுரைகள் மற்றும் நெறிமுறைகளை உள்ளடக்கியது. விதுரர் பாண்டவர்கள் மற்றும் கௌரவர்களின் மாமா மிகுந்த புத்திசாலியும் நீதி அறிவும் கொண்டவர். அவர் துரியோதனனுக்கு பலவித அறிவுரைகளை வழங்கியுள்ளார்இ இதுவே "விதுரா நீதி" என்று அழைக்கப்படுகிறது.

விதுரர் தனது அறிவுரைகளை மூன்று முக்கியமான துறைகளில் அளிக்கிறார்:

1. நேதிக விதிகள் (Ethical Guidelines)

நல்லாட்சி**: ஒரு அரசன் தனது நாடு மக்களைக் கோபமில்லாமல் கருணையுடன் ஆட்சி செய்ய வேண்டும். அரசன் ஒரு சிறந்த தலைவராக மக்கள் நலனில் அக்கறையுடன் இருக்க வேண்டும்.
நல்ல நடத்தை**: சதாசாரத்தைப் பின்பற்றியவர்களே புண்ணியவான்களாக மறுமையில் நன்மையை அடைவார்கள் என்று விதுரர் வலியுறுத்துகிறார். வாழ்க்கையின் அடிப்படை உத்திகள் அன்பு கருணை மற்றும் அநயாச குணங்களை அடிப்படையாகக் கொண்டதாக இருக்க வேண்டும்.

2. அரசாங்கம் மற்றும் ஆட்சி (Governance and Administration)**

நீதிமுறை ஆட்சி**: அரசன் தன் இராச்சியத்தை அறவழியில் நடத்த வேண்டும். பிறரை மானங்கெட்டு ஆட்சி செய்ய வேண்டாம். செல்வாக்கு மற்றும் அதிகாரம் நேர்மையாகக் கையாளப்பட வேண்டும்.
செயல் திறமை**: அரசன் நேர்மையாகவும் சிறந்த முறையிலும் செயல் திட்டங்களை அமல்படுத்த வேண்டும். அறியாமல் அல்லது அக்கறையின்றி செயல் ஆக்கினால் அது நஷ்டம் ஏற்படுத்தும்.

3. அறிவுத்திறன்கள் (Wisdom and Intelligence)**

ஆத்மநியந்த்ரணம் (Self-Control): அடக்கமாகப் பேசுதல் செருக்கற்ற நடத்தை காம க்ரோதம் லோபம் ஆகியவற்றை கட்டுப்படுத்துதல் அரசன் மற்றும் பொதுமக்களுக்கு மிக முக்கியமானது.
செயல்திறமை**: கடின உழைப்பு மற்றும் விடாமுயற்சியே சிறந்த வாழ்க்கைக்குத் தேவையானவை. அறிவுடன் வேலை செய்தால் மட்டுமே வாழ்க்கையில் வெற்றி பெற முடியும்.

விதுரா நீதி என்பது அரசியல் சட்டம் நீதி நற்பண்புகள் மற்றும் ஆன்மீகத் திறன்களைக் கொண்ட விவரிக்கிறது. இதற்கிடையே துரியோதனன் விதுரரின் அறிவுரைகளை பின்பற்றாததால் அவன் அழிவைச் சந்திக்க வேண்டியிருந்தது

------------------------------------------

'நியோகம்" என்பது ஒரு தமிழ் சொல் அது பொதுவாகச் சில சாத்திரங்களில் (சமஸ்கிருதம் மற்றும் தமிழ்) குறிப்பாக ஒரு தனியுரிமை அல்லது கடமைக்கான குறிப்பைக் குறிக்கிறது. இதற்கு பொதுவாக "கடமையாக்குதல்" அல்லது "அனுமதித்துச் செய்வித்தல்" என்று பொருள் கொள்ளலாம்.

மரபு வழியில் "நியோகம்" என்பதைக் குறிப்பிட்டுச் சில சூழல்களில் குழந்தை இல்லை அல்லது வாரிசு இல்லாத ஒரு தம்பதிக்குஉ பிள்ளைகளைப் பெறுவது உறுதிசெய்யப்பட வேண்டிய நிலையை குறிக்கப் பயன்படுத்தப்பட்டது. இதில் ஒருவரின் குடும்ப வாரிசை தொடர வழி வகுத்தல் சார்ந்த ஒரு சடங்கு அல்லது அனுமதி அடங்கும்.